ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2015 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

භූගෝල විද්‍යාව I
புவியியல் I
Geography I

22 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

17634

சுட்டெண் : ..........................

**அறிவுறுத்தல்கள் :**

※ இவ்வினாத்தாள் இரண்டு பகுதிகளைக் கொண்டுள்ளது.

※ பகுதி **I, 30** பல்தேர்வு வினாக்களைக் கொண்டுள்ளது. பகுதி **I** இற்கான விடைகள் இத்தாளிலேயே எழுதப்பட வேண்டும்.

※ பகுதி **I** மற்றும் பகுதி **II** ஆகியவற்றுக்குரிய இரண்டு விடைத்தாள்களும் ஒன்றாக இணைக்கப்பட்டு கையளிக்கப்பட வேண்டும்.

**பரீட்சகரின் உபயோகத்திற்கு மட்டும்.**

| | வினா இல. | புள்ளிகள் |
|---|---|---|
| பகுதி I | 1 - 30 | |
| பகுதி II | 1 | |
| | 2 | |
| | 3 | |
| மொத்தம் | | |

| | கையொப்பம் | குறியீட்டு எண் |
|---|---|---|
| 1 ஆவது பரீட்சகர் | | |
| 2 ஆவது பரீட்சகர் | | |
| மேலதிக பிரதம பரீட்சகர் | | |
| பிரதம பரீட்சகர் | | |
| கணிதப் பரிசோதகர் | | |

## பகுதி I

● ஒவ்வொரு வினாவுக்குமான சரியான விடையினைத் தெரிவுசெய்து, அதற்குரிய இலக்கத்தினை எதிரேயுள்ள **புள்ளிக்கோட்டில்** எழுதுக.

**1.** பின்வரும் விடைகளுள் எது, 1:50 000 இடவிளக்கப் படங்களில் காணப்படும் மூன்று பௌதிக அம்சங்களைத் தருகின்றது?
(1) உயர் நிலங்கள், சாய்வுகள், இயற்கைத் தாவரம்
(2) காடுகள், தீவுகள், பயிர்கள்
(3) புல் நிலங்கள், பள்ளத்தாக்குகள், நெல் நிலங்கள்
(4) சமவெளிகள், குவிவுச்சாய்வு, குடியிருப்புக்கள்
(5) சதுப்பு நிலங்கள், குழிவுச்சாய்வு, பாலங்கள் (......)

**2.** 1:50 000 இடவிளக்கப் படத்தில் 10 cm ஆகக் காட்டப்படும் ஆறு ஒன்றின் உண்மையான நீளம் எவ்வளவாக இருக்கும்?
(1) 2.5 km (2) 5 km (3) 7.5 km (4) 10 km (5) 15 km (......)

**3.** மிகச் சிறிய அளவுத்திட்டப் படமொன்றின் வகைக்குறிப் பின்னத்தினைச் சரியாகக் காட்டும் விடை எது?
(1) 1:2 000 (2) 1:5 000 (3) 1:40 000 (4) 1:200 000 (5) 1:250 000 (......)

**4.** பல்கோட்டு வரைபடமொன்றில் காட்டுவதற்கு மிகவும் பொருத்தமானது எது?
(1) ஏற்றுமதிகளின் வருடாந்த மாற்றங்கள்
(2) குறிப்பிட்ட வருடமொன்றின் நிலப் பயன்பாட்டுப் பாங்கு
(3) வகுப்பொன்றின் மாணவர்களது வரவு
(4) நாடுகளின் அடிப்படையில் சுற்றுலாப் பயணிகளின் வருகை
(5) கைத்தொழில் துறைகளின் படி மாதாந்த மின்சாரப் பயன்பாடு (......)

**5.** இரண்டாம்நிலைத் தரவுகளைப் பயன்படுத்துவதினால் ஏற்படும் நன்மையினை விளக்கும் சரியான விடை எது?
(1) வெளிக்களத்தில் அவதானிக்க முடியும்
(2) நேரம் சேமிக்கப்படும்
(3) ஆய்வாளரின் நோக்கங்களுக்கேற்ப சேகரிக்க முடியும்
(4) உண்மைத் தன்மை உயர் மட்டத்தில் காணப்படும்
(5) மூலக் குறிப்பின்றிப் பயன்படுத்த முடியும் (......)

[பக். 2 ஐப் பார்க்க

6. பின்னகத் தரவுகளுடன் தொடர்புபட்ட மூன்று மாறிகளைச் சரியாகக் காட்டும் விடை எது?
   (1) சுற்றுலாப் பயணிகளின் வருகை, ஏரிகள் மற்றும் குடும்பத்திலுள்ள பிள்ளைகள்
   (2) உயரம், நிலப்பயன்பாடு மற்றும் தூரம்
   (3) படிவுவீழ்ச்சி, உயர்ச்சி மற்றும் மண் ஈரப்பதன்
   (4) நிறை, நிலப்பயன்பாடு மற்றும் ஆவியாக்கம்
   (5) மண் ஈரப்பதன், ஆவியாக்கம் மற்றும் நேரம் (……)

7. தரவுத் தொகுதியொன்றின் பரம்பலைக் காட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் இரண்டு அளவைகள் யாவை?
   (1) இடைக் காலணை வீச்சு மற்றும் சராசரி விலகல்
   (2) வீச்சு மற்றும் திரட்டு மீடிறன்
   (3) இடையம் மற்றும் சதமணை
   (4) நியம விலகல் மற்றும் இடை
   (5) ஆகாரம் மற்றும் மேற் காலணை (……)

8. குறிப்பிட்ட வருடங்களைக் கொண்ட காலப் பகுதியில் இலங்கையின் அரிசி உற்பத்தியையும் இறக்குமதிகளையும் ஒன்றாகக் காட்டுவதற்கு மிகவும் பொருத்தமான வரைபு யாது?
   (1) கூட்டு பார் வரைபு
   (2) இரட்டை பார் வரைபு
   (3) கூட்டு கோட்டு வரைபு
   (4) சாதாரண குத்தான பார் வரைபு
   (5) மீடிறன் பல்கோணி (……)

9. புவியியல் தகவல் முறைமையில் (GIS) காணப்படும் இரண்டு முக்கியமான தரவு உள்ளீட்டு முறைகள் யாவை?
   (1) எண்ணிலக்கப்படுத்தல் மற்றும் பூகோள இடநிலைப்படுத்தல் முறைமை (GPS)
   (2) எண்ணிலக்கப்படுத்தல் மற்றும் வரைபு
   (3) பூகோள இடநிலைப்படுத்தல் முறைமை மற்றும் அச்சுப் பதிப்பு
   (4) புள்ளிவிபர அட்டவணைகள் மற்றும் அறிக்கைகள்
   (5) எண்ணிலக்கக் கோப்பு மற்றும் படம் (……)

10. இடஞ்சார்ந்த தரவுகளைப் பெறுதல், சேமித்து வைத்தல், நிர்வகித்தல், பகுப்பாய்வு செய்தல் மற்றும் காட்சிப்படுத்தல் ஆகியவற்றுக்குப் பயன்படுத்தப்படும் தன்னியக்கமான ஒரு தொழில்நுட்பம் யாது?
   (1) பூகோள இடநிலைப்படுத்தல் முறைமை (GPS)
   (2) புவியியல் தகவல் முறைமை (GIS)
   (3) தொலைநுணர்வு
   (4) விமான ஒளிப்படம்
   (5) லான்சட் (Landsat) படிமம் (……)

11. பின்வரும் விடைகளுள் எது படை மண்டலத்தின் அண்ணளவான எல்லைகளைச் சரியாகத் தருகின்றது?
   (1) 18 கி.மீ. - 40 கி.மீ.
   (2) 10 கி.மீ. - 60 கி.மீ.
   (3) 14 கி.மீ. - 50 கி.மீ.
   (4) 16 கி.மீ. - 80 கி.மீ.
   (5) 10 கி.மீ. - 40 கி.மீ. (……)

12. வளிமண்டலச் சேர்க்கையில் உள்ள வாயுக்களில் அதிக கனவளவில் காணப்படும் இரண்டு வாயுக்கள் யாவை?
   (1) நைதரசன் மற்றும் ஒட்சிசன்
   (2) நைதரசன் மற்றும் காபனீரொட்சைட்
   (3) ஒட்சிசன் மற்றும் மெதேன்
   (4) ஒட்சிசன் மற்றும் ஓசோன்
   (5) ஹீலியம் மற்றும் கிறிப்ரன் (……)

13. வளிமண்டலப் 'பொதுச் சுற்றோட்டத்திற்குப்' பொறுப்பான பிரதான காரணி யாது?
   (1) நிலத்திற்கும் கடலுக்கும் இடையில் அமுக்கச் சாய்வு விசையில் காணப்படும் வேறுபாடு
   (2) அகலக் கோடுகளுக்கு மேலாகக் காணப்படும் தாழ் மற்றும் உயரமுக்க வலயங்கள்
   (3) தாழ் அகலக் கோடுகளில் உருவாக்கப்படும் உராய்வு விசை
   (4) வெவ்வேறு அகலக் கோடுகளில் காணப்படும் கொரியோலிஸ் விசையின் மாறுதன்மை
   (5) வெவ்வேறு அகலக் கோடுகளில் இடம்பெறும் மையநாட்ட விசை (……)

14. ஆற்றின் அரித்தல் செறிவினைப் பிரதானமாக நிர்ணயிப்பது,
   (1) சாய்வின் இயல்பு மற்றும் புவிச்சரிதவியல் அமைப்பு
   (2) சாய்வின் இயல்பு மற்றும் மியாந்தர்கள்
   (3) அரிப்புக்குட்படும் பருப் பொருட்களின் தன்மை மற்றும் ஆற்று ஓங்கல்
   (4) உயரணைகள் மற்றும் ஆற்று ஓங்கல்
   (5) கழிமுகம் மற்றும் வெள்ளச்சமவெளி (……)

15. மலைப் பனிக்கட்டியாறுகளினால் உருவாக்கப்படும் ஓர் அரித்தல் நிலவுருவம்
   (1) தளத்திடைக் குன்று
   (2) பனிக்கட்டியாற்றுப்படிவு
   (3) நீள்மணற் குன்று
   (4) நீள்குன்று
   (5) தொங்கு பள்ளத்தாக்கு (……)

[பக். 3 ஐப் பார்க்க

**16.** பின்வரும் விடைகளுள் எது, அடையல் மற்றும் தீப்பாறைகளின் உருமாற்றத்தினால் (Metamorphism) உருவாக்கப்படும் இரண்டு வகையான பாறைகளைச் சரியாகத் தருகின்றது?
(1) பளிங்குப்பட்டைப் பாறை மற்றும் சலவைக் கற்கள்
(2) கருங்கல் மற்றும் சலவைக் கற்கள்
(3) எரிமலைக் குழம்புப்பாறை மற்றும் சலவைக் கற்கள்
(4) சுண்ணாம்புக்கல் மற்றும் தொலமைற்று
(5) கப்ரோ மற்றும் தொலமைற்று (……)

**17.** பின்வரும் விடைகளுள் எது, இழுவிசை நகர்வுகளினால் உருவாக்கப்படும் மூன்று நிலவுருவங்களைச் சரியாகத் தருகின்றது?
(1) உதைப்புக் குறை, பிளவுக் குறை மற்றும் மேன்மடிப்பு
(2) உதைப்புக் குறை, சாதாரண குறை மற்றும் கீழ்மடிப்பு
(3) சாதாரண குறை, பிளவுக் குறை மற்றும் கீழ்மடிப்பு
(4) உதைப்புக் குறை, பிளவுக் குறை மற்றும் படிக்குறை
(5) உதைப்புக் குறை, கீழ்மடிப்பு மற்றும் பாறைப் பிதிர்வுக் குறை (……)

**18.** மண்ணின் பிரதான பௌதிகப் பண்புகள் யாவை?
(1) நிறம், கட்டமைப்பு மற்றும் ஈரப்பதன்
(2) நிறம், கட்டமைப்பு மற்றும் உவர்த்தன்மை
(3) கட்டமைப்பு, ஈரப்பதன் மற்றும் அமிலத்தன்மை
(4) நிறம், அமிலத்தன்மை மற்றும் உவர்த்தன்மை
(5) அமிலத்தன்மை, கட்டமைப்பு மற்றும் நிறம் (……)

**19.** பின்வரும் எந்த மூன்று இடங்களில் இலங்கையின் உயர் நிலத் தொடருக்குரிய உருமாறிய பாறைகள் காணப்படுகின்றன?
(1) இறக்குவானைக் குன்றுகள், மத்திய குன்றுகள் மற்றும் தப்போவை
(2) மத்திய குன்றுகள், இறக்குவானைக் குன்றுகள் மற்றும் கதிர்காமக் குன்றுகள்
(3) இறக்குவானைக் குன்றுகள், கதிர்காமக் குன்றுகள் மற்றும் ஆண்டிகம
(4) கதிர்காமக் குன்றுகள், தப்போவை மற்றும் ஆண்டிகம
(5) தப்போவை, ஆண்டிகம மற்றும் பள்ளம (……)

**20.** உலகின் அயன மழைக்காடுகள் பிரதானமாகக் காணப்படுவது,
(1) பிரேசில், மியன்மார், வியட்னாம் மற்றும் தென் ஆபிரிக்கா
(2) பிரேசில், மியன்மார், மத்திய இந்தியா மற்றும் தென் ஆபிரிக்கா
(3) மத்திய இந்தியா, மலேசியா, மத்திய சிலி மற்றும் கலிபோர்னியா
(4) பிரேசில், சயர், கலிபோர்னியா மற்றும் தென் அவுஸ்திரேலியா
(5) பிரேசில், மியன்மார், லாவோஸ் மற்றும் தாய்லாந்து (……)

**21.** அகன்ற அடித்தளத்தைக் கொண்ட ஒரு குடித்தொகைக் கூம்பில், வயதுப் பிரிவுகளின் மேல்நோக்கிய நகர்வின்போது ஏற்படும் குறுகிய நிலையானது குடித்தொகையில் எதனைக் குறித்துக் காட்டுகின்றது?
(1) விரைவான வீழ்ச்சி
(2) விரைவான அதிகரிப்பு
(3) மெதுவான வீழ்ச்சி
(4) தற்போதைய மட்டத்தில் உறுதியான நிலை
(5) உத்தம மட்டமொன்றினை அடைதல் (……)

**22.** உலக சனத்தொகையில் வளர்முக நாடுகளில் தற்பொழுது வாழ்கின்ற சனத்தொகையின் அண்ணளவான சதவீதம் யாது?
(1) 25% (2) 35% (3) 40% (4) 50% (5) 80% (……)

**23.** பின்வரும் விடைகளுள் எது சேவைத் துறையொன்றின் பொருளாதார நடவடிக்கையைக் காட்டுகின்றது?
(1) கைவினைப் பொருட்களைச் செய்பவராகத் தொழில் புரிதல்
(2) பேருந்து ஓட்டுனராகத் தொழில்புரிதல்
(3) மீனைத் தகரத்தில் அடைக்கும் கைத்தொழிலில் தொழில் புரிதல்
(4) இரும்பு மற்றும் உருக்கு ஆலையில் தொழிலாளியாகப் பணி புரிதல்
(5) பயிர்ச் செய்கைக்காக நிலத்தினைத் தயார்படுத்தும் விவசாயியாகத் தொழில் புரிதல் (……)

**24.** பின்வரும் கூற்றுக்களில் எது, பெயர்ச்சிப் பயிர்ச்செய்கையினைச் சிறந்த முறையில் விவரிக்கின்றது?
(1) சந்தைக் கேள்விக்கேற்ப வருடாந்தம் பயிர்களை மாற்றுகின்ற ஓரினப் பயிர்ச்செய்கை
(2) பல வருடங்களின் பின்னர் ஒரு துண்டு நிலத்தினைக் கைவிட்டு பிறிதொன்றினை நோக்கிச் செல்லும் பிழைப்பூதிய விவசாய நடைமுறை
(3) ஒரு துண்டு நிலத்தில் விலங்குகளை வளர்ப்பதுடன், பயிர்களையும் பயிரிடும் செறிவான விவசாயம்
(4) அயனப் பிரதேசங்களில் படிக்கட்டு நிலங்களில் மேற்கொள்ளப்படும் விவசாயம்
(5) தரையொன்றிலிருந்து இன்னொன்றுக்கு கால்நடைகளை நகர்த்துகின்ற இடம்பெயர் விவசாய முறைமை (……)

[பக். 4 ஐப் பார்க்க



இங்கே வெட்டவும்

25. உலகின் முக்கியமான நான்கு சனத்தொகைச் செறிவுகளைக் காட்டும் சரியான விடை யாது?
(1) கிழக்கு ஆசியா, தென் ஆபிரிக்கா, ஐரோப்பாவின் தென் பகுதி, வட அமெரிக்காவின் வடகிழக்குப் பகுதி
(2) கிழக்கு ஆசியா, தென் ஆசியா, வடமேற்கு ஐரோப்பா, தென் ஆபிரிக்கா
(3) தென் கிழக்கு ஆசியா, தென் ஆசியா, வட அமெரிக்காவின் வடகிழக்குப் பகுதி, மத்திய அமெரிக்கா
(4) கிழக்கு ஆசியா, தென் ஆசியா, வடமேற்கு ஐரோப்பா, வட அமெரிக்காவின் வட கிழக்குப் பகுதி
(5) வடமேற்கு ஐரோப்பா, வட அமெரிக்காவின் மேற்குப் பகுதி, கிழக்கு ஆசியா, தென் ஆசியா (......)

26. பின்வரும் விடைகளுள் எது சனத்தொகையின்படி 2025 இல் உலகில் காணப்படும் மிகப் பெரிய இரண்டு நகரங்களைச் சரியாகக் காட்டுகின்றது?
(1) லண்டன் மற்றும் டோக்கியோ (2) டோக்கியோ மற்றும் மும்பாய்
(3) நியூயோர்க் மற்றும் மும்பாய் (4) டோக்கியோ மற்றும் டாக்கா
(5) மும்பாய் மற்றும் கொல்கத்தா (......)

27. இலங்கையின் மிகப் பெரிய மற்றும் மிகச் சிறிய மாவட்டங்கள் இரண்டினை அவற்றின் நகர சனத்தொகையின் அடிப்படையில் முறையே சரியாகக் காட்டும் விடை யாது?
(1) கொழும்பு மற்றும் அம்பாந்தோட்டை (2) கொழும்பு மற்றும் கேகாலை
(3) கம்பஹா மற்றும் அம்பாந்தோட்டை (4) கொழும்பு மற்றும் நுவரெலியா
(5) கண்டி மற்றும் கேகாலை (......)

28. உலகில் தற்பொழுது அதிகளவில் கரும்பினை உற்பத்தி செய்யும் இரண்டு நாடுகள் யாவை?
(1) பிறேசில் மற்றும் மெக்சிக்கோ (2) இந்தோனேசியா மற்றும் தாய்லாந்து
(3) பிறேசில் மற்றும் இந்தியா (4) பிறேசில் மற்றும் பாகிஸ்தான்
(5) இந்தியா மற்றும் சீனா (......)

29. 'ஐனு' (Ainu) என்னும் பூர்வீக மக்கட் பிரிவினர் வாழும் நாடு எது?
(1) இந்தியா (2) தென் ஆபிரிக்கா
(3) நியூசீலாந்து (4) அவுஸ்திரேலியா
(5) யப்பான் (......)

30. 2013 இல், தென் ஆசியாவில் மிக உயர்வான மானிட அபிவிருத்திச் சுட்டெண்ணைக் (HDI) கொண்டிருந்த இரண்டு நாடுகள்,
(1) மாலைதீவு மற்றும் பூட்டான் (2) மாலைதீவு மற்றும் இந்தியா
(3) இலங்கை மற்றும் மாலைதீவு (4) இலங்கை மற்றும் நேபாளம்
(5) மாலைதீவு மற்றும் பங்களாதேஷ் (......)

* *

[பக். 5 ஐப் பார்க்க

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2015 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தரப்) பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

භූගෝල විද්‍යාව I
**புவியியல் I**
Geography I

22 T I

17634

## பகுதி II

**அறிவுறுத்தல்கள் :**

※ **முதலாம்** வினாவுக்கும் **2**ஆம் **3**ஆம் வினாக்களிலிருந்து **ஒரு** வினாவையும் தெரிந்தெடுத்து **இரண்டு வினாக்களுக்கு மாத்திரம்** விடை எழுதுக.

※ 1:50000 அளவுத்திட்டத்திலமைந்த பள்ளேகம இடவிளக்கப் படத்தின் ஒரு பகுதியும் **இரண்டு** வரைபுத்தாள்களும் வழங்கப்படும்.

**1.** இலங்கை நில அளவைத் திணைக்களத்தினால் வெளியிடப்பட்ட 1:50000 என்னும் அளவுத்திட்டத்திலமைந்த பள்ளேகம இடவிளக்கப் படத்தின் ஒரு பகுதி உமக்குத் தரப்பட்டுள்ளது. படத்தின் சமவுயரக்கோட்டு இடைவெளிகள் 20 மீற்றர்களாகும். இப்படத்தினைப் பயன்படுத்திப் பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

**குறிப்பு:**
※ **படத்தின் மேல் விடைகள் எழுதப்படலாகாது.**
※ விடைத்தாளில் தொடர்புடைய வினா இலக்கத்தினையும் உப பிரிவு இலக்கத்தினையும் தெளிவாகக் குறிப்பிட வேண்டும்.
※ உமது விடைத்தாளுடன் படத்தினை இணைக்க **வேண்டாம்.**

(i) படப் பகுதியில் காணப்படும் மிக உயர்வான இடத்தின் உயரத்தினை மீற்றரில் குறிப்பிடுக. (01 புள்ளி)

(ii) படத்தில் AB மற்றும் CD எனக் குறித்துக் காட்டப்பட்டுள்ள கோடுகள் நெடுகிலும் காணப்படும் சாய்வுகளின் வகையினை இனங்கண்டு பெயரிடுக. (02 புள்ளிகள்)

(iii) படத்தில், இலக்கம் 1 மற்றும் 2 என்பவற்றினால் குறித்துக் காட்டப்படும் நாற்பக்கல்களில் காணப்படும் மானிடக் குடியிருப்புக்களின் வகைகளை இனங்கண்டு பெயரிடுக. (02 புள்ளிகள்)

(iv) இலக்கம் 3 இனால் குறித்துக் காட்டப்படும் நாற்பக்கலில் காணப்படும் குளமொன்றினை 1 : 25 000 அளவுத்திட்டத்திற்கேற்ப மீளவும் வரைந்து காட்டுக. (04 புள்ளிகள்)

(v) படப் பிரதேசத்தில் காணப்படும் வடிநிலப் பாங்கினைச் சுருக்கமாக விவரிக்குக. (03 புள்ளிகள்)

(vi) படப் பிரதேசத்தில் காணப்படும் நெற் பயிர்ச்செய்கையின் பரம்பலில் செல்வாக்கு செலுத்தியுள்ள காரணிகளை ஆராய்க. (04 புள்ளிகள்)

(vii) படப் பிரதேசத்தின் மேற்கு அரைப் பகுதியில் விவசாய நடவடிக்கைகளையும், மானிடக் குடியிருப்புக்களையும் விரிவாக்க **முடியாமைக்கான** பிரதான காரணங்களை ஆராய்க. (04 புள்ளிகள்)

**2.** (i) புவியியல் தகவல் முறைமையொன்றின் (GIS) பிரதான உள்ளடக்கக் கூறுகள் யாவை என்பதைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(ii) புவியியல் தகவல் முறைமையின் திறன்மிக்க பயன்பாட்டுக்கு அத்தியாவசியமான **மூன்று** முக்கிய மூலகங்களை விளக்குக. (06 புள்ளிகள்)

(iii) தரவு முகாமைத்துவம் மற்றும் பகுப்பாய்வில் புவியியல் தகவல் முறைமைத் தொழில்நுட்பத்தின் **மூன்று** நன்மைகளை விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iv) நவீன படவரைகலையியலின் அண்மைக்கால விருத்தியில் இனங்காணக் கூடிய **மூன்று** முனைப்பான அம்சங்களை விவரிக்குக. (06 புள்ளிகள்)

[பக். 6 ஐப் பார்க்க

3. அட்டவணை 1 இல், 2005 இல் இருந்து 2013 வரைப்பட்ட காலத்தில், தெரிவுசெய்யப்பட்ட ஐந்து வருடங்களில் இலங்கையின் விவசாய ஏற்றுமதிகளின் பெறுமானமானது பிரதான வகைகளின் அடிப்படையில் பில்லியன் ரூபாய்களில் தரப்படுகின்றது.

அட்டவணை 1 :- 2005 இல் இருந்து 2013 வரை இலங்கையின் விவசாய ஏற்றுமதிகள் (பில்லியன் ரூபாய்களில்)

| வகை | 2005 | 2007 | 2009 | 2011 | 2013 |
|---|---|---|---|---|---|
| தேயிலை | 81.5 | 113.6 | 136.2 | 164.9 | 199.4 |
| இறப்பர் | 4.7 | 12.1 | 11.3 | 22.8 | 9.2 |
| தெங்கு | 11.4 | 14.2 | 18.6 | 29.4 | 26.5 |
| ஏனைய விவசாயப் பயிர்கள் | 18.4 | 42.7 | 43.9 | 62.4 | 98.8 |

*மூலம்*: Economic and Social Statistics of Sri Lanka, 2014

அட்டவணை 1 இல் தரப்பட்டிருக்கும் தரவுகளைப் பயன்படுத்திப் பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

(i) அட்டவணை 1 இல் தரப்பட்டிருக்கும் தரவுகளைப் பிரதிநிதித்துவப்படுத்தும் வகையில் கூட்டு பார் வரைபொன்றினை வரைக. (10 புள்ளிகள்)

(ii) வரைபிலிருந்து இனங்காணக்கூடிய இலங்கையின் விவசாய ஏற்றுமதிகளில் காணப்படும் **மூன்று** போக்குகளைச் சுருக்கமாகக் குறிப்பிடுக. (06 புள்ளிகள்)

(iii) அட்டவணை 1 இல் தரப்பட்டுள்ள தரவுகளை விவரமாகக் காட்டுவதற்கு கூட்டு பார் வரைபு தவிர்ந்த பிறிதொரு பொருத்தமான படவரைகலையியல் முறையொன்றினைப் புனையா வரைபடங்களினுதவியுடன் சுருக்கமாக விளக்குக. (04 புள்ளிகள்)

※ ※ ※

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2015 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

**22 | I**

භූගෝල විද්‍යාව I
புவியியல் I
**Geography I**

17634




SCALE 1:50,000

සමෝච්ච රේඛා අන්තරය මීටර 20
சமவுயரக்கோடு இடைவெளி 20 மீற்றர்
Contour Interval 20 metres

17634

AL/2015/22/T-II



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2015 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

භූගෝල විද්‍යාව II
புவியியல் II
Geography II

22 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

**அறிவுறுத்தல்கள் :**

※ ஒவ்வொரு பகுதியிலிருந்தும் குறைந்தபட்சம் **இரண்டு** வினாக்களையேனும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

## பகுதி I - பௌதிகப் புவியியல்

1. (i) (அ) ஆறு ஒன்றின் நீள்கோட்டு பக்கப்பார்வையினைக் காட்டும் புனையா வரைபடம் ஒன்றினை வரைக. (02 புள்ளிகள்)

(ஆ) நீள் கோட்டுப் பக்கப்பார்வையின் **மூன்று** பிரதான கட்டங்களைக் (Phases) குறித்துக் காட்டுவதுடன் அக்கட்டங்களுள் இனங்காணக்கூடிய **ஒவ்வொரு** செயன்முறைகளைப் பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) ஆறொன்று அதன் அடையற் சுமையினை என்னென்ன வழிகளில் கொண்டு செல்கின்றதென்பதைச் சுருக்கமாக விளக்குக. (03 புள்ளிகள்)

(iii) ஆற்றுப் பள்ளத்தாக்கு ஒன்றில் அரித்தலினால் உருவாக்கப்படும் **மூன்று** நிலவுருவங்களின் உருவாக்கச் செயன்முறையை விளக்குக. (06 புள்ளிகள்)

(iv) ஆற்றுப் பள்ளத்தாக்கு ஒன்றில் படிதல் செயன்முறையின் காரணமாக உருவாக்கப்படும் **மூன்று** பிரதான நிலவுருவங்களை விவரிக்குக. (06 புள்ளிகள்)

2. (i) புவியின் கற்கோளத்தில் காணப்படும் பிரதான புவியோட்டு விருத்திக்குரிய தகடுகள் **ஆறினைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) கற்கோளத்தில் புவியோட்டு விருத்திக்குரிய தகடுகளின் அசைவினால் உருவாக்கப்படும் **இரண்டு** பிரதான நிலவுருவங்களை விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iii) புவிநடுக்கமொன்றினால் உருவாக்கப்படும் **மூன்று** பௌதிகரீதியான தாக்கங்களை விளக்குக. (06 புள்ளிகள்)

(iv) புவிநடுக்கமொன்றினால் ஏற்படும் சேதங்களைக் குறைப்பதற்கு எடுக்கப்பட்டு வரும் **மூன்று** நடவடிக்கைகளை விளக்குக. (06 புள்ளிகள்)

3. (i) மண் உருவாக்கச் செயன்முறைக்குப் பங்களிக்கும் **நான்கு** காரணிகளைப் பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ii) மேலே (i) இல் உம்மால் பெயரிடப்பட்டவற்றுள் **இரண்டு** காரணிகளைத் தெரிவு செய்து அவை எவ்வாறு மண் உருவாக்கச் செயன்முறைக்குப் பங்களிக்கின்றதென்பதை ஆராய்க. (04 புள்ளிகள்)

(iii) (அ) மண்ணின் பக்கப்பார்வையினைக் காட்டும் வரைபடமொன்றினை வரைக. (02 புள்ளிகள்)

(ஆ) உம்மால் வரையப்பட்ட மண்ணின் பக்கப்பார்வையில் காணப்படும் **நான்கு** பண்புகளை விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iv) இலங்கையில் மண்ணின் தரமிழப்புக்குப் பொறுப்பான **நான்கு** மானிடக் காரணிகளை ஆராய்க. (06 புள்ளிகள்)

4. (i) உலகின் **நான்கு** பிரதான உயிரினக் கூட்டங்களைப் (Biomes) பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ii) மேலே (i) இல் உம்மால் பெயரிடப்பட்ட உயிரினக் கூட்டங்களில் **ஒன்றினைத்** தெரிவுசெய்து அதன் முனைப்பான பண்புகள் **நான்கினை** விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iii) மேலே (ii) இல் உம்மால் விவரிக்கப்பட்ட உயிரினக் கூட்டத்தினால் எதிர் கொள்ளப்படும் **மூன்று** பிரச்சினைகளை விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iv) இலங்கையில் காடுகளைப் பேணிப் பாதுகாப்பதற்கு எடுக்கப்பட்டு வரும் **நான்கு** நடவடிக்கைகளைச் சுருக்கமாக விளக்குக. (06 புள்ளிகள்)

[பக். 2 ஐப் பார்க்க

## பகுதி II - மானிடப் புவியியல்

5. (i) குடித்தொகை இடப்பெயர்வு என்பதனால் கருதப்படுவது யாது என்பதனைச் சுருக்கமாகக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(ii) உலகின் குடித்தொகை இடப்பெயர்வில் தற்பொழுது காணப்படும் **நான்கு** முனைப்பான பண்புகளை விவரிக்குக. (04 புள்ளிகள்)

(iii) உலகின் குடித்தொகை இடப்பெயர்வுடன் தற்பொழுது இணைந்து காணப்படும் **நான்கு** பிரச்சினைகளைச் சுருக்கமாக ஆராய்க. (06 புள்ளிகள்)

(iv) இலங்கையின் சமூக பொருளாதார அபிவிருத்திக்கு தொழிலாளர் வெளி இடப்பெயர்வின் மூலம் உருவாக்கப்படும் **நான்கு** பங்களிப்பினை மதிப்பீடு செய்க. (08 புள்ளிகள்)

6. **அட்டவணை 1** இல் 1970 மற்றும் 2013 இல் உலகில் பாரியளவில் அரிசியை உற்பத்தி செய்யும் பத்து நாடுகள் வகுதி ஒழுங்கில் காட்டப்பட்டுள்ளன.

**அட்டவணை 1** :- 1970 மற்றும் 2013 இல் உலகில் பாரியளவில் அரிசியை உற்பத்தி செய்யும் பத்து நாடுகள்

| 1970 | | | 2013 | | |
|---|---|---|---|---|---|
| வகுதி | நாடுகள் | உற்பத்தி (ஆயிரம் மெ.தொ. இல்) | வகுதி | நாடுகள் | உற்பத்தி (ஆயிரம் மெ.தொ. இல்) |
| 1 | சீனா ... | 109,990 | 1 | சீனா ... | 230,290 |
| 2 | இந்தியா ... | 63,338 | 2 | இந்தியா ... | 159,200 |
| 3 | இந்தோனேசியா ... | 19,331 | 3 | இந்தோனேசியா ... | 71,280 |
| 4 | பங்களாதேஷ் ... | 16,715 | 4 | பங்களாதேஷ் ... | 51,500 |
| 5 | யப்பான் ... | 16,493 | 5 | வியட்னாம் ... | 44,039 |
| 6 | தாய்லாந்து ... | 13,850 | 6 | தாய்லாந்து ... | 38,787 |
| 7 | வியட்னாம் ... | 10,173 | 7 | மியன்மார் ... | 28,000 |
| 8 | மியன்மார் ... | 8,162 | 8 | பிலிப்பைன்ஸ் ... | 18,439 |
| 9 | பிரேசில் ... | 7,553 | 9 | பிரேசில் ... | 11,759 |
| 10 | பிலிப்பைன்ஸ் ... | 5,578 | 10 | யப்பான் ... | 10,758 |
| | உலகம் ... | 316,346 | | உலகம் ... | 745,710 |

*மூலம்*: Geo Hive - Rice Producton : 1996 - 2015

(i) **அட்டவணை 1** இனை ஆதாரமாகக் கொண்டு 1970 க்கும் 2013 க்கும் இடையில் உலகின் அரிசி உற்பத்தியில் காணப்படும் **நான்கு** போக்குகளைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(ii) மேலே (i) இல் உம்மால் குறிப்பிடப்பட்ட போக்குகளில் **ஒன்றினைத்** தெரிவு செய்து, அதற்குப் பொறுப்பான **இரண்டு** காரணிகளைத் தருக. (04 புள்ளிகள்)

(iii) இலங்கையில் அரிசி உற்பத்தியின் அதிகரிப்புக்குப் பொறுப்பான **மூன்று** காரணிகளை ஆராய்க. (06 புள்ளிகள்)

(iv) இலங்கையில் அரிசி உற்பத்தி எதிர்நோக்கும் **இரண்டு** பிரச்சினைகளை விளக்குக. (06 புள்ளிகள்)

7. (i) உலகில் தற்பொழுது மோட்டார் வாகனங்களைப் பாரியளவில் உற்பத்தி செய்யும் **நான்கு** நாடுகளைப் பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ii) மோட்டார் வாகன உற்பத்திக் கைத்தொழிலின் அமைவிடத்தினைத் தீர்மானிக்கும் **நான்கு** காரணிகளைச் சுருக்கமாக ஆராய்க. (06 புள்ளிகள்)

(iii) உலகின் மோட்டார் வாகன உற்பத்திக் கைத்தொழிலில் காணப்படும் அண்மைக்காலப் போக்குகள் **நான்கினைப்** பரிசீலிக்குக. (06 புள்ளிகள்)

(iv) மோட்டார் வாகனங்களை உற்பத்தி செய்யும் நாடுகள் தற்பொழுது எதிர்நோக்கும் **நான்கு** பிரச்சினைகளைச் சுருக்கமாக ஆராய்க. (06 புள்ளிகள்)

8. (i) (அ) இலங்கையின் பிரதான சுற்றுலா வலயங்கள் **நான்கினைப்** பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ஆ) இலங்கைக்கு அதிக எண்ணிக்கையில் வரும் சுற்றுலாப் பயணிகளின் நாடுகள் **நான்கினைப்** பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ii) இலங்கையைச் சுற்றுலாக் கவர்ச்சிக்குரியதொன்றாக உருவாக்குவதற்குப் பொறுப்பாகவிருந்த **மூன்று** பிரதான காரணிகளை விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iii) இலங்கையின் பொருளாதார விருத்திக்கு சுற்றுலாக் கைத்தொழில் எவ்வாறு பங்களிக்கின்றதென்பதைக் காட்டும் **நான்கு** காரணிகளை விளக்குக. (06 புள்ளிகள்)

(iv) இலங்கையில் சுற்றுலாக் கைத்தொழிலினை விருத்தி செய்வதற்கு அரசாங்கத்தினால் மேற்கொள்ளப்பட்டுவரும் **இரண்டு** நடவடிக்கைகளை விவரிக்குக. (04 புள்ளிகள்)

* * *